ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௰ | மெய்கண்டான் யாண்டு-௭௱௰ மார்கழித் திங்கள் 1932௵ டிசம்பர்௴—1933௵ ஜனவரி௴ | பரல் ௧௨

## திருவாசகம்

### அ. ஆனந்தத் தழுந்தல்.

புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக வன்றி தாக வன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக வங்க ணாள புங்க மான போகமே.

பதவுரை:—

அங்கணாள—அழகிய கண்களை உடையவனே,
புங்கமான போகமே—உயர்ந்த இன்பப் பொருளே,
எந்தை—எனது தந்தையே,
புணர்ப்ப தொக்க—(ஆண்டவனோடு மாறுபட்டொழுகும் அடிமையான ஒருவனை அந்த ஆண்டவன், இன்மொழிகூறல், ஈகை, பிரிவு, ஒறுப்பு (சாம தான பேத தண்டம்) என்னும் நான்கு வழிகளினாலும் தன்னிடத்தில் வரும்படி செய்து தன்னொடுஞ்) சேர்த்துக் கொள்ளுதல்போல,
என்னை—(உனது அடிமையாதற்குத் தகுதியில்லாத) என்னை,
ஆண்டு—(ஆசாரிய வடிவங்கொண்டு என்னிடம் எழுந்தருளிவந்து உலக வாழ்வு மயக்கிலிருந்து விடுவித்து உனது அடிமையாகக்கொண்டு) ஆண்டருளி,

பூண நோக்கினாய்—(என்மேல் வைத்த பேரிரக்கத்தால் உனது அருட் பார்வையை) உள்ளும் புறமும் அழுந்தும்படிவைத்து என்னிடத்தி லுள்ள மலம் நீங்கி மெய்யறிவு விளங்கும்படி செய்தாய்;

இது புணர்ப்பதன்று என்றபோது—இவ்வாறு நீ என்னைச் செய்தது உனது அடிமையாதற்கு யாதொரு தகுதியுமில்லாத எனக்குக் கிடைத்தற்கு அரியது என்று உனது செயல் அருமையை நான் அறிந்து நினைந்த பொழுது,

என்னிது—(இதுவரை என்னுடன் சேர்ந்திருந்த) என்னுடைய ஆணவ மலமானது

நின்னொடென் னொடு புணர்ப்பதாக—நின்னொடு என்னையும் அத்துவித மாய்க் கூடும்படியாகவும்,

அன்றிதாக அன்பு (அன்றி + து + ஆக)—முன்பு நின்னொடு மாறுபட்டு உலக வாழ்வின் மேலாக நின்ற அன்பானது,

நின்கழற் கண்ணே—இப்பொழுது நினது திருவடிக்கண்ணே,

புணர்ப்பதாக—சேர்த்து அதை விட்டு மீளாமல் நிற்கும்படியாகவும் ஆக் கியது; இந்த அருட்செயலுக்கு நான் செய்யுங் கைம்மாறு என்ன இருக்கிறது?

விளக்கவுரை:—

இந்த அருமையான பாட்டு இறைவனுக்கும் உயிருக்குமுள்ள சிறப்பு ஆண்டான் அடிமைத்திறம் கூறுகின்றது.

அங்கணா—என்பது கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம் என்கிறபடி இறைவனுடைய பேரருட்டிறம் குறித்து நிற்கிறது.

புங்கமான போகம்—என்பதனால் உலக போகத்தினின்று நீங்கின உயர் போகம் என்பது கூறப்பட்டது.

"ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணாப் போகமாய்த் தான் விளைந்த பொற்பினான்" இறைவன் ஆதலின் அடிகள் இறைவனைப் புங்க மான போகமே என்று விளித்துக் கூறினார்.

எந்தை—இறைவனும் உயிரும் முறையே தந்தையும் மகனும் என்ற முறை யிலுள்ளவர்கள் என்பது கூறப்பட்டது. "மன்னவன் றன்மகன் வேட ரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்— பின்னவனு மேன் மகனீ யென்றவரைப் பிரித்து" என்ற சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் முதற் செய்யுட் கருத்து நோக்குக.

புணர்ப்பது—என்னும் சொல் நான்கு அடிகளின் முதலிலும் வருகின்றது. முதலாவது மூன்றாவது நான்காவது அடிகளில் வருகிற சொல் சேர்ப்பது என்ற பொருளிலும் இரண்டாவது அடியில் வருகிற சொல் கிடைப்பது என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றன.

பூணநோக்கினுய்—நோக்குதல் என்பது சக்ஷுதீக்ஷை. பூண நோக்குதலாவது மலம் நீங்கும்படி உள்ளும் புறமும் அருட்பார்வையால் அழுந்த நோக்குதல்.

நின்னொடென்னோடு—என்னோடு என்பது உருபு மயக்கம். இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்தது.

என்னிதாம்—என் + இது + ஆம் எனப்பிரித்தும் ஆம் என்ற சொல்லை அசைச்சொல் ஆக்கியும் என்னுடைய ஆணவமலம் எனப்பொருள் உரைக்கப் பட்டது. இது என்பது பண்டறிசுட்டாக ஆணவமலம் குறித்து நிற்கிறது.

அன்றிதாக அன்பு—அன்று + து + ஆக எனப்பிரித்து து சாரியை ஆகக் கொள்ளப்பட்டது. அன்றுதல்=மாறுபட்டுதல். அன்றி ஆக (நின்ற) அன்பு அதாவது மாறுபட்டு உலகவாழ்வின் மேல் ஆக நின்ற அன்பு.

ஆக்கியது என்னும் ஆக்கச்சொல் தொக்கி நிற்கின்றதை வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. இந்த அருட் செயலுக்கு நான் செய்யுங் கைம் மாறு என்ன இருக்கிறது? என்பது குறிப்பெச்சம். இப்பாட்டில் ஆணவ மலமானது பேரின்பம் அடைதலுக்குக் காரணமாயிருக்கிறதென்று கூறப் பட்ட கருத்து:—

முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவனு போகந் துய்த்தலணு—மெத்தவே
இன்பங்கொ டுத்தலிறை யித்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொ ளப்பா

என்னும் உண்மை விளக்கம் ருoவது வெண்பாவிற் கூறப்பட்டிருத்தல் காண்க. பேரின்பத்தைக் கொடுக்கிறவன் இறைவனுயினும் அப்பேரின்பத் தை அடைய உயிர் செய்யும் முயற்சிக்கு ஆணவமலம் தடையாய் எதிர்ப்புச் செய்து அம்முயற்சியில் உயிர் ஈடுபட்டு நிற்கச் செய்கின்றது. ஒருவன் ஒரு பாரமான பொருளை மேலே தூக்குதற்கு ஒரு அடையானது அவனது முயற்சிக்கு உதவியாயிருத்தல் போல ஆணவ மலமானது உயிர் செய்யும் முயற்சிக்கு எதிர்மறை அம்சத்தில் (Negative aspect) உதவியாயிருக் கின்றது

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

குறிப்பு:—

என்னிதாம், அன்றிதாம் என்னும் சொற்றொடர்களைப் பலவகை யாகப் பிரித்துப் பார்த்து நான் மேலே கூறியிருக்கிறபடி பிரித்தல் இங்கே கூறப்பட்ட கருத்துக்குப் பொருந்தி யுள்ளது என்று நினைக்கிறேன். அவை களை வேறுவகையிற் பிரித்துப் பொருள் கொள்வது பொருத்தமாயிருந்தால் அதனை அன்பர்கள் தெரிவிப்பார்களாக.

# தமிழ் அறிவியற் சொற்கள்

## வடிவளவை – **Geometry**

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்]

(முன் ௪அஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

*Elevation* ... நிமிர்ச்சி
*Depression* ... தாழ்ச்சி
Angle of elevation ... நிமிர் முடக்கு
Angle of depression ... தாழ் முடக்கு
*To Trace* ... விளம்ப
To trace on paper ... தாளில் விளம்ப
*Tracing paper* ... விளம்புதாள்
Tracing cloth ... விளம்பு துணி
*Tracing* ... விளம்பம் (விளம்பப்பட்ட வடிவம்)

விளம்பு என்ற சொல் பழைய திண்ணைப் பள்ளிக்கூடங்களிலெல்லாம் வழக்காற்றில் இருந்துவந்த தொன்றாகும். மணலைப் பரப்பி அதன்மீது அரிசுவடியை விளம்பு என்று சொல்வதுண்டு. இத்தகையதோர் சிறந்த சொல் அகராதிகளிற் காணப்படாதது விந்தை யன்றோ?

*Ordination* ... ஆயம்
Oblique ordination ... ஓராயம்
Compulsion / Set ordination ... கட்டாயம்
Extracted essence ... சாராயம்
Inquisition in an ordained manner ... பூராயம்
Orderly precision ... தோராயம்
*Ordinate* ... ஆயம்
Co-ordinate ... துணையாயம்
Horizontal ordinate ... குறுக்காயம்

Vertical ordinate ... நெட்டாயம்
Perpendicular ordinate ... குத்தாயம்

தட்டையளவையிலுள்ள இந்த ஆயங்களெல்லாம் ஒன்று கூடுகிற இடத்திற்கு Point of origin (தோற்றக்குற்று) என்று பெயர். அதைச் சுருக்கமாக origin என்றே சொல்லி o என்ற சுன்ன வடிவிட்டெழுதலே மரபு.

Point of origin தோற்றக்குற்று என்று நேர் பொருள் படினும் அஃது அளவை நூலுக்கு முரணு யமைந்த தொன்ருகும், தோற்றம் என்பது விளக்கத்தையும் குற்று என்பது ஒடுக்கத் தையுங் குறிக்குமாதலால்.

ஈண்டு, Point என்பதற்குக் குற்று என்று கொண்ட பொருளை ஒரு நண்பர் மறுத்துளதை ஆராயவேண்டியதாக இருக் கின்றது. குற்று என்பது வல்லோசை யுடையதாய் எளிதில் உச் சரிக்கக் கூடாததொன்ரு யிருப்பதால் அதை யொழித்து அணு இடம் என்று கோடல் வேண்டும் என அவர் விழைகிருர். அணு என்பது பல மரபுச் சொற்களுக்கும் பயன்படக் கூடியதொரு சொல்லாகும். அவ்வாறு அஃது இக்கட்டுரைத் தொடர்களிலேயே பல இடங்களிற் பயன்படுத்தப்பட்டு மிருக்கிறது. அது நிற்க. Point என்பதற்கு அணு என்று பொருள் கொள்ளுதல் அறிவிய லுக்கு முரணுனதாகும். என்னே? அணு என்பதற்கு அகற்சி நீட்சியாகிய வரையறை யுண்டு, point என்பதற்கோ அது கிடையா தாகலின்.

அணுவி லணுவினே யாதிப் பிரானே
அணுவி லணுவினே யாயிரங் கூறிட்
டணுவி லணுவை யணுகவல் லார்கட்
கணுவி லணுவை யணுகலு மாமே.

—திருமந்திரம்

என்றதனுனே "அணுவிலணு" என்பதே ஆயிரங்கூருகப் பகு படுவ தொன்றெனக் கண்டோம். எனவே அணுவிலணு என் பது Atom என்ற ஆங்கிலச் சொல்லுக்கே நேர் பொருளாகும். Atom என்ற அணுவிலணு ஆயிரங் கூருகப் பகுபடும் என்பதே இற்றை நாள் ஆராய்ச்சி முடிபு. இம்முடிபு திருமந்திரத்துள் முற்

குறித் தோதப்பட்டமை உளங்கொளற்பாற்று *Atom* அணுவி லணுவாயின் *Molecule* அணுவாகும்.

Point என்பதற்கு ஓம் என்று பொருள் கொண்டு point of origin என்பதைக் குறிக்கும் o என்றும் ஆங்கில எழுத்துக் கிடாக ஓ என்னும் தமிழெழுத்தைக் குறிப்பதிலுள்ள ஒப்புமை நோக்குக.

"ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்கார தீதத் துயிர்மூன்று முற்றன
ஓங்காரம் சிவ பரசிவ ரூபமே."

"ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனு மோங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனு மோங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே."

—திருமந்திரம்

இவ்விரு செய்யுள்களிலிருந்து (Form) உரு, (Variation of species) பலபேதம், (Attainments) சித்தி என்ற பலவும் ஓம் என்ற ஒன்றிலிருந்து தோன்றிப் பரவுகிறது என்றும் (emancipation or reduction) முத்தி, (Disappearance of form) அரு என்ற இரண்டும் அதனுட் சென்று ஒடுங்குகிறதென்றும் அறியக் கிடக்கின்றது. வடிவளவை Point என்ற குற்றிற்றோன்றி அதிலேயே இறுதி யுறுவதாகும். அற்றாக, ஓம் என்றதை யொழித்த மற்றொரு நேர் பொருளைக் கருதவுங் கூடுமோ? எனவே *Point* என்பதற்குக் குற்றை யொழித்து ஓம் எனக் கோடல் சிறந்ததாம்.

| | | |
|---|---|---|
| *Segment* | ... | துண்டு |
| Plane angle | ... | தட்டை முடக்கு |
| Rectilinear angle | ... | நேர்வரை முடக்கு |
| Plane rectilinear angle | ... | நேர்வரை முடக்கு |
| *Inclination* | ... | சாய்வு, சரிவு |
| *Sum* | ... | தொகை, மொத்தம் |

| | | |
|---|---|---|
| Difference | ... | வேற்றுமை, வேறுபாடு, மிச்சம், பிசிர். |
| Vertically opposite | ... | நுனிக்கு நுனி எதிரான |
| Rectilinear figure | ... | நேர்வரைஇ |
| Obtuse angled triangle | ... | விரி மும்முடக்கி |
| Acute angled triangle | ... | கூர் மும்முடக்கி |
| *Rhomboid* | ... | எதிர்சரி நாற்சிறைஇ |
| *Analysis* | ... | வகுத்துக் காட்டல் |
| *Synthesis* | ... | தொகுத்துவைத்தல் |
| Geometrical analysis | ... | வடிவளவை வகுத்துக் காட்டு |
| *Concurrence* | ... | ஒரு முனைவு |
| Concurrent straight lines | | ஒரு முனைவு நேர்வரைகள் |
| Pedal triangle | ... | அடி புனை மும்முடக்கி |
| Ortho centric triangle | ... | செம்மைய மும்முடக்கி |
| *Gnomon* | ... | டகாரப்பகுதி |
| Commensurable | ... | பொது அளவுடைய |
| Incommensurable | ... | பொது அளவில்லா |
| *Algebra* | ... | குறியீட்டு எண்ணளவை, குறியளவை |

பீஜகணிதம் என்றும் வீச கணிதம் என்றும் இப்பொழுது Algebra என்ற பகுதிக்குப் பெயர் வழங்குவது அப்பகுதியில் எண்களுக்குப் பதிலாக a, b, c போன்ற எழுத்துக்களை எழுது வதனுலேயே. இதனுல் அவ்வெழுத்துக்களுக்குச் சிறப்பு ஈந்ததா யிற்று. ஆனுல் உண்மை யென்னவெனில் அவ்வெழுத்துக்களினு லாய பயன் ஏதுமில்லை. அவ்வெழுத்துக்களை யொழித்து வேறு எக்குறியிட்டேனும் அப்பகுதியை விளக்கலாம். கணக்கு என்ற அளவையை எண்களை யொழித்து எழுத்துக்களைக் கொண்டு பொதுப்பட விளக்குவதே Algebra என்பதாகும். ஆகவே குறி யளவை என்று கோடலே நேரிதாம்.

***Formula*** என்பது Form என்ற சொல்லடியாப் பிறந்த தாகும். அதற்கு அளவைப் பகுதியில் இயற்கையுண்மைகளி லிருந்து தேர்ந்துகொள்ளப்பட்ட அறிவியலுண்மைகளைக் குறியீட்

டினால் விளக்குவதாகும். இதற்குத் தமிழில் ஆக்கம் என்று பெயர்.

"இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்"
(தொல். சொல். 19)

(Natural things are simply described what they are)

"செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்"
(தொல். சொல். 20)

(Worked out things are described with the process and the result of the working)

"ஆக்கந்தானே காரண முதற்றே" (தொல். சொல். 21.)

(The worked out result bears upon logical reasoning)

| | | |
|---|---|---|
| Mathematics | ... | கணக்கியல், அலகியல். |
| Mathematical formula | ... | கணக்கியலாக்கம், அலகிய லாக்கம். |
| Algebraic formula | ... | குறியளவை யாக்கம். |
| *Science* | ... | அறிவியல் |
| Term | ... | கிளவி, சொல் |
| Scientific terms | ... | அறிவியற்கிளவி, அறி வியற் சொல். |
| Equation | ... | இணைகள், இணைவுகள். |
| Algebraic equation | ... | குறியெண்ணிணை. |
| Quadratic | ... | இரு பெருக்கமான, இரு பெருக்க. |
| Quadratic equations | ... | இருபெருக்க இணைவுகள். |
| Cubic equations | ... | முப்பெருக்க இணைவுகள். |
| Biquadratic equations | ... | நாற்பெருக்க இணைவுகள். |
| Equations of the Kth degree | | காப்பெருக்க இணைவுகள். |

—காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை.

——

# தமிழ் உரைநடை நூல்கள்

(திரு. K. சிவராமகிருஷ்ண நாவலர் வரைவது)

சங்கத்தார் காலத்தில் தமிழில் உரைநடை யென்றோர் வேறு நடையில்லை; ஆசிரியப்பாவே அன்னார் உரைநடையாய் இருந்த தெனினும் பொருந்தும். உரையிடையிட்ட செய்யுணூற்கள் சில காணப்படுகின்றன. அவை பெருந்தேவனார் பாரதம், சிலப்பதிகாரம் முதலியனவாம். பின்னர், நச்சினார்க்கினியர், சேனாவரையர், அடியார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர் காலத்தில் உரைநடை புதியதோருயிர் பெற்றது. அதற்கிடையில் வடமொழியுந் தமிழுங் கலந்த மணிப்பிரவாள நடை சைனராலும், ஆரியராலும் போற்றப்பட்டுவந்தது. அவ்விழிந்த நடை வழக்கழிந்து ஒழிந்ததற்கு யாம் மகிழ்கின்றோம். பின்னர், சரவணப் பெருமாளையர், ஆறுமுக நாவலர் முதலியவர்களால் செவ்விய நடை தமிழுலகில் பரந்தோடி இன்றளவும் இனிமை ஊட்டுகின்றது. ஆறுமுக நாவலரின் தமிழ்த்தொண்டு நம்மவரால் மிகவும் போற்றற்பாலதா மென்க.

இனி யாம் இக்கட்டுரை வரைவான் புகுந்தது தற்கால உரைநடையைப்பற்றிச் சில செப்பற்கே. முதன் முதல் உரைநடையின் வரலாற்றுக்கோவையைச் சில சொற்றொடர்களால் குறித்தோம். தற்கால உரைநடை நூற்களிற் சில, அளவில் ஆங்கில மொழிகள் கலப்புற் றிருக்கின்றன. இவ்வாறு கலத்தல் தனிப்பெருந் தமிழ்த்தாய்க்கு ஊறு நிகழ்த்தலேயாம். நாளடைவில் தமிழ்ச்சொற்கள் குறைதற்கும் ஆங்கிலச் சொற்கள் மிகுதற்கும் காரணம் இதுவேயாமென்க. ஒவ்வொரு ஆங்கிலச்சொல்லிற்கும் தனித்தமிழில் புதிய சொல் இருத்தல்வேண்டும். ஆதலால், அச்சொற்களை நாமே ஆக்கி உலகிடை வழங்கச் செய்தல்வேண்டும். இத்தொண்டே தற்காலத் தமிழர்க்கின்றியமையாக் கடப்பாடாம். தமிழின் செவ்விய நடை மறைமலை அடிகளாலும், கலியாணசுந்தர முதலியாராலும் போற்றப்பட்டு வருதற்கு யாம் உவக்கின்றோம். ஆங்கிலநாவல்களை மொழிபெயர்ப்பதினும், புதிய நவீன நாவல்கள் புனைவது தமிழ்ப் பெருந்தாய்க்குச் சிறப்பும் வளர்ச்சியுமாம். ஆதலால்

நாவலாசிரியர்கள் மிக முயன்று தமிழுலகைப் புதிய இனிய நாவல்களால் அணிபெறச்செய்யக் கடப்பாடுடையார்கள். நாவலாசிரியர்களிற் சில்லோர், வடமொழிச் சொற்களையே மிகப் போற்றி வழங்குகின்றனர். இவர்களை யாம் தமிழ்க்கொலைஞர் என அழைக்கின்றேம். தமிழில் எற்ற சொற்க ளிருந்தும் வட மொழிச் சொற்களை வாரிப் பொழிகின்றனர். இத்தகைய தமிழ்க் கொலைஞர்களில் வடுவூர்-துரைசாமி ஐயங்காரும் ஒருவர் ஆவர். இன்னும், அவர் உணராதிருப்பின் தமிழ்த்தாய் செய்த தவப் பிழைபோலு மென்றே வருந்துவேம். நம் மக்களிற் பெரும் பாலார் வடமொழிச் சொற்களைத் தமிழினிடையே வழங்கின், சிறந்த தமிழ்நடையென மகிழ்கின்றனர். காரணம் யாது? ஆரியர் சமய நூற்களுக்குரை எழுதிய மணிப்பிரவாளமும் தமிழ்க் கொலைஞர் வரைந்த நாவல்களுமாம். இன்னும், காலந் தாழ்க்காது தமிழ்த்தொண்டர்கள் எளிய இனிய தனித்தமிழில் நூற்கள் வரைந்து வடமொழிச் சொற்களில் மயங்கிக்கிடக்கும் மக்களின் மனத்தைக் கவர்தல்வேண்டும். இலக்கியங்கட்கிலக்கியமும் எண் ணற்றன இயற்றல்வேண்டும். இத்தொண்டில் தமிழ்ப்பெருந்தகை திருவாளர் சேதுப்பிள்ளை அவர்கள் முயல்வது யாம் எழுமையும் மறக்கற்பாலதன்று. ஆங்கில பௌதீக இரஸாயன நூற்களை ஒன்றொழியாது தமிழில் மொழிபெயர்த்தல் ஆங்கில பட்டதாரி கட்குரிய அரிய தொண்டென்க. பௌதிக இரசாயன கழகங்கள் பல நிறுவி அதில் அவைகளை ஆராய்ந்து, புதிய உண்மைகள் கண்டு பல தமிழ்நூற்கள் படைத்தலே, அக் கலைகளுணர்ந்தார்க் குரிய கடன். தமிழின் மொழிவரலாற்று நூற்களும் மிகுதல் வேண்டும். பழைய தண்டமிழ்ப் புலவர், அன்னோரைப் போற்றிய அரசர் இன்னோரின் காலம் ஆற்றவும் ஓர் அளவில் காண்டல் வேண்டும். தமிழ்த்தோன்றல்காள்! நலிவு, தளர்வு, தாழ்ச்சி யால் நிலத்தில் வீழ்ந்துகிடக்கும் நந்தமிழ்ப் பெருந் தனித்தாயை நோக்குமின்! அன்னையை எழுப்பி அலக்கணீக்குமின்!

---

# பரம்பொருள் கட்டளைகள் பத்து

[திரு. M. S. பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள்.]

மக்களுய்யுமாறு உலகிற் றோன்றிய பலகோடி சமயங்கள் ஒவ்வொன்றிலும் இறைவனு லளிக்கப்பெற்ற கட்டளைகளிவை யென வெடுத்தோதுதல் வழக்கம். பழைய ஏற்பாடென்ற மறை நூலில் தெய்வம் மோசஸ் என்ற பெரியாருக்கு இட்டவாணைகள் பத்தென்றும், புதிய ஏற்பாட்டிலும் அவை ஒப்புக்கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன வென்பதைக் கிறித்தவர்கள் கூறுவர். அவை யாவன :—

1. ஒன்றே தெய்வம் தெய்வம் பலவல
2. உருவம் வழிபடேல்
3. ஆணை யிடேல்
4. ஓதுவ தொழியேல்
5. தந்தை தாய்ப்பேண்
6. கொலை புரியேல்
7. பிறன்மனை நயவற்க
8. களவு செய்யற்க
9. பொய்ச்சான்று பகரேல்
10. பிறன்பொருள் வெளவேல்

1. ஒன்றே தேய்வம்—பல தெய்வங்கள் கிடையா. கடவுளுக்கு எண்குணத்தான் என்று பெயருளது. ஒவ்வொரு குணந் தொழிலிவற்றிற்கு ஒரு தனிப்பெயரளிப்பது கற்பிதம். ஆக்கும் கடவுள், அழிக்கும் கடவுள், காக்கும் கடவுள், அளிக்கும் கடவுள் எனப் பல பெயர்களால் உலகம் போற்றும். ஞாயிறு போற்றுக, திங்கள் போற்றுக, திருமாலுக் கடிமைசெய், ஆதிபகவன் என்பன ஒருபொருட் கிளவிகளாம். உலக மாக்கப்பெற்ற நாண் முதலுள்ளது ஆதியெனப்படும். 'ஆதி பகவன் முதற்றே யுலகு.' திருஞான சம்பந்தரும் 'ஞாலம் நின்புகழே மிகவேண்டும், தென் ஆலவாயி லுறையுமெம் ஆதியே' என்றனர். 'சென்று நாம் சிறு தெய்வஞ் சேர்வோமல்லோம்' என்பது திருநாவுக்கரசர் வாக்கு. 'ஒருநாமம் ஒரு ருவம் ஒன்று மிலாற்கு ஆயிரந் திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ' என்றனர் திருவாசக

ரும். அன்பே கடவுள். அன்பும் சிவமுமொன்றென்பர். கிறித்த வர்கள் கடவுள் அன்பென்பர். இரண்டிற்குமுள்ள பொருள் வேறுபாட்டினை ஆய்க.

2. உருவம் வழிபடேல். மக்கள் தம் அறிவு, நாகரிகத்திற்குத் தக்கவாறு ஒருருவத்தை யமைத்து நினைத்துத் தொழுவர். வயிறு தள்ளி, யானைக் கொம்பன், துதிக்கையன் என்பன அறிவாற்ற லுடையார்க்கு இழிவேயாம். சோதியே, சுடரே என்று கூறுவர் சான்றோர். ஆலயந்தொழுவது சாலவும் நன்றெனின் பாம்பு முத லான விகாரமான உருவங்களை யமைத்துத் தொழுதல் அறிஞர் செயலாகாது. சிலுவையைக் கிறித்தவர் கோயிலில் காண்கின்றோம். அது அஞ்ஞானியின் படாத பாட்டை நினைப்பூட்டு மென்பர். நிலவளவு நூலில் உருவ மமைத்து உண்மையை விளக்க வில்லையா என்கின்றனர்.

3. ஆணையிடேல். கடவுள் பெயராலும் கண்ணைக்கொண்டும், அருமை பெருமை வாய்ந்த உறவினர் பெயர்மீதும் ஆணையிடுதல் இந்துக்கள் வழக்கம். அது தெய்வத்தை இகழுவதாகும். ஆதலால் தெய்வமிகழேல் என்றனர் ஔவையாரும். இவ்வழக்கம் எந்த நாட்டிலும் காணப்படும். 'பை காட்,' 'குட் ஹெவன்ஸ்' முதலான ஆணை மொழிகள் ஆங்கில நூற்களிலும், பேச்சு வழக்கிலும் மிகுந்து வருவதைக் காணலாம். சத்தியமாகச் சொல்லுகிறேன் என்ற பொருளில் ஆணையிடுதல் வழக்கம். சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும் என்பர்.

4. ஓதுவ தொழியேல். கிறித்தவர்களில் சனிக்கிழமையன்று உலக காரியங்களை ஒழித்துத் தெய்வத்தையும், மறைகளையும் ஓத வேண்டுமென்றிருந்தது. பின்னர்ச் சனி ஞாயிருக மாறிற்று. ஞாயிறுதோறும் வேதமோதுகின்றனர். தமிழ் மக்கள் ஒவ்வொரு நாளும் தமிழ் மறைகளில் சிற்சில செய்யுட்களையேனும் படியாமல் உணவுகொள்வதில்லை. ஓதுதல் என்பது சமய நூலைக் கற்றலே யாகும். தேவாரத்தை ஆலயத்தில் ஓதுகின்றவர் ஓதுவார் எனப் படுவர். ஓதுவ தொழியேல், எனெனின் ஓதாதார்க்கில்லை யுணர் வொடு வொழுக்கம். ஓதாமலொருநாளு மிருக்கவேண்டாம். காலையு மாலையு நான்மறை யோதா அந்தணரென்பவர் அனைவரும் பதரே. அப்பமூர்த்திகளும் 'பிறந்தேன் நின்திருவருளே, பேசினல்லால்

பேசாத நாளெல்லாம் பிறவா நாளே,' என்று திருவாய் மலர்ந்தனர்.

5. தந்தை தாய்ப்பேண். ஏன்? நம்மைச் சுமந்து பெற்று வளர்த்து பாடுபட்டவர்கள் பெற்ரோரெனப்படுவர். தந்தை சொன்மிக்க மந்திரமில்லை. தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை. மாதாவையொருநாளும் மறக்கவேண்டாம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். கண்கூடாகக்காணும் தெய்வங்கள் நம்பெற்ரோர்களே யாவர். ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்ரோனெனக் கேட்ட தாய் என்றனர் செந்நாப்போதாரும். 'சான்ரோரென்கை ஈன்ரோர்க்கழகு,' தாய்சொல் துறந்தால் வாசகமில்லை. 'பொல்லாத சேயெனினுந் தாய்தள்ளல் நீதமோ, புகலிடம் பிறிதுமுண்டோ?' என்றனர் தாயுமானுரும். அவையில் தன் மகனை முந்தியிருக்கச்செயல் தந்தையாற்று முதவியாம். இவ்வாறு கல்வியில் மேம்பாடுறவும், கருணை மயமாய் நின்று தனைப் புரக்கும் பெற்ரோர்களை அன்னார் முதிர்ச்சி எய்துங்கால் போற்றிப் பேணுதல் முறையன்ரோ?

6. கொலை புரியேல். ஒருயிரையும் கொல்லலாகாது. இம்சை செய்யலாமென்று பெறலாகாது. புத்தர்களும் சமணர்களும் இவற்றையே அறச்செயல்களாகக் கொண்டனர். 'நல்லா றெனப்படுவதுயாதெனின் யாதொன்றும் கொல்லாமை சூழும்நெறி'. 'அறவினையாதெனின் கொல்லாமை'. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா வுயிருந் தொழும்'. 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி தின்னுயிர் நீக்கும்வினை'. 'ஊனைத்தின் றூனைப் பெருக்காமைமுன்னினிதே'. விலங்கின் தசை புலாலாகும் 'கொல்லாவிரதம் குவலயமெலாமோங்க' என்றனர் தம் பராபரக்கண்ணியில். 'நோன்பென்பது கொன்று தின்னுமை,'

7. பிறன்மனை நயவற்க. பிறன்மனை புகாமை அறனெனத்தகும். மெல்லினல்லாள் தோள் சேர். மங்கலமென்ப மனைமாட்சி. இல்லிறப்பான்கண் பகை, பாவம், அச்சம் பழி யென நான்கும் இகவாவாம். இல்லறத்தில் நின்று கணவனைப்போற்றும் மனைவியை வஞ்சனை சூது மயக்கங்களால் பிரித்தல் சண்டாளமாகும். தெய்வந் தொழாஅள் கொழுநனைத் தொழு தெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை'. பிறன்மனையை நயப்பவனுக்குத் தன்மனை இல்லிறப்பின் வரும் வெதுளி என்னே? இல்லறத்திற்கே

இவ்வுயிர் நிலை அமைந்துளதாயின் இல்லறத்திற்குக் கேடுசூழும் புல்லறிவாளனுக்கு உயிர் நிலை தங்குமா? காமத்தால் கெட்டவர் கோடி கோடியே. 'காதல் கவருடல் கள்ளுண்டல் பொய் மொழிதல் ஈதன் மறுத்தல், இவை பாவங்களாம். 'எவ்வினையரேனும் இணைவிழைச் சொன்றில்லெனின் தெவ்வுந் திசைநோக்கிக் கை தொழும்' என்றார் நீதிநெறி விளக்குவார்.

8. களவு செய்யற்க. களவென்னுங் காரறிவாண்மை. 'கள்வார்க்குத் தள்ளும் உயிர் நிலை'. 'புலையுங் கொலையும் களவும் தவிர்'. இம் மூன்று செயல்களும் குற்றமேயாம். 'கொலை களவு செய்வாரோடிணங்க வேண்டாம்'. என்? நல்லிணக்க மல்லது அல்லல் படுத்தும். பிறரறியாமல் பிறன் பொருளை எடுத்துப் போதல் களவாகும். உடையவனை வற்புறுத்திப் பறித்தல் கொள்ளை யெனப்படும். 'கள்ளமறவர் கனத்த அகம்படியர் மெள்ள மெள்ள வந்து வெள்ளாளரானாரே'. கள்ளமறவர் ஆறலைத்து வழி பறிக்கும் மறவர் (வீரர்). அன்னார் பொருள் சேரச்சேர அத்தொழிலை யகற்றி விடமர்ந்து வேளாண்மை (பயிர்த்தொழில்) செய்வர். காவல் செய்யும் மறவர் வேறு. திசை காவல் செய்பு மக்கட்குச் சுதந்தர மேற்பட்டுளது. செய்கையாலன்றி மனத்தினால் பிறருடைய பொருளைக் களவாட நினைத்தலுந் தீதே.

9. பொய்ச்சான்று பகரேல். நெஞ்சறியப் பொய்பேசற்க. பிறருக்குக் கேடு வாராதபோது அப்பொய் வெண் பொய்யெனப்படும்; கேடுவரின் கரும்பொய்யாகும். நடுவு நிலைமை தவிர்ந்து ஒரு பக்கம் சேர்ந்து உள்ளதை உள்ளவாறு இயம்பாமல் பொன், மாதர், பூமி மீது இச்சை கொண்டு ஓஞ்சொல்லல் பழியாக்கும். 'கண்டொன்று சொல்லேல்', 'நெஞ்சாரப் பொய்தன்னைச்சொல்ல வேண்டாம்'. 'கானாத வார்த்தைகளைக் கட்டுரைக்க வேண்டாம்'. பொய் மெய்யாதலும் மெய் பொய்யாதலும் சொல்வன்மையின் பயனென்பர். அவ்வாறு செய்தலால் எங்குமுளவொருவன் அறிவனுதலின் தீமையடைதல் திண்ணமாம். 'நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகமில்லை. மன்று பறித்துண்பாரிடம் 'வேதாளஞ் சேருமே, வெள்ளெருக்குப் பூக்குமே பாதாள மூலிபடருமே, மூதேவி சென்றிருந்து வாழ்வளே, சேடன் குடிபுகுமே' என்று பலவாறு ஓஞ் சொல்லலை இகழ்ந்துளர் பலபுலவரென்பர்.

10. பிறன்பொருள் வௌவேல். இதன் பொருள் மேற்கூறிய களவு, பிறன்மனை நயத்தலில் (7-8) அடங்கும். எதாயினுஞ்சரி, பிறன் உடைமையைப் பிடுங்கிக்கொள்ளாதே. கொள்ளைவிரும்பேல். போகத்தைமுனி. மையலென்பதை மனத்திலகற்று. பொல்லாங்கென்பவை எல்லாந்தவிர். தவிர்ப்பது எங்ஙனம்? ஆசையை அறவே ஒழித்தல்வேண்டும், அல்லது ஆசை மிதமிஞ்சலாகாது. அவாவின்மை தூய்மை. அவா வஞ்சிக்கும். அவா துன்பத்துட்டுன்பம். அவா அற்றாரே துறந்தாராவர். அவா கெடின் இன்பம் இடையறாது ஈண்டும். பிறப்பிற்கு வித்து ஆசை யென்பர். பிறவாமை வேண்டு மென்று வணங்குவார் அவாவினை அடியுடன் அழிப்பர். செல்வம் நிலையாது, இளமை நிலையாது, யாக்கை நிலையாது. ஆதலால் கரவன்மின், இட்டுண்டிரும் என்ற முதுமொழி கோடற்பாலது.

பரம்பொருளிட்ட கட்டளைகளனைத்தும் எஞ்ஞான்றும் எம்மக்களுக்கும் பொருந்துமாதலின் அவை மீறலால் இடுக்கண்வந்துறும். கடவுள் கட்டளைகளனைத்தும் பெரியார் வாய்மொழியே யாகும். அவ்வாறு கூறுவோர் ஞானிகள், முனிவர்கள், ரிஷிகளெனப் பல பெயர் பெறுவர். தீதொழிய நன்மைசெயலே எம்மதத்தோருஞ் சொல்லும் உண்மை. உலக வழக்கில் இப்பத்துக் கட்டளைகளும் குறிக்கோளாகக் கொள்ளப்படும். தவறு செய்தல் இம்மை மக்களியல்பு. இம்மையில் உலகஞானம் முதிர்ந்து பரஞானம் பெறாதவர்களுக்கு இப்பத்துக் கட்டளைகளும் சிறந்தனவேயாம். பதினொன்றாவது கட்டளை யொன்றுளது அதுவே அனைவர்க்கும் ஆக்கஞ்செய்வ தென்பர். அது அறிவு விரிவினால் ஏற்படுவது. அறிவிலிகள் கையாளத் தக்கதன்று. அது யாதெனில் 11. பிடி படேல். எவ்வினை செய்யினும் அது பிறரால் கண்டு பிடிக்கப்படாதவாறு இருத்தல் வேண்டும். இது உலக வாழ்க்கைக்கு இன்றியமையாதாயினும் பட்டாங்கிலுள்ளது ஆகாது. ஆதலால் இக் கட்டளையைக் கைப்பிடித்த மக்கள் உய்தல் இயலாது. பலநாள் கள்வன் ஒருநாளைக்கு அகப்படுவான் என்பது முதுரை யாதலின் என்றாவது அகப்படுதல், பிடிபடல் நேரிடும். அப்பொழுது மானம் குலம் கலவி தாளாண்மை அனைய சிறப்புகளெல்லாம் பறந்துபோம். மறைவழிப்பட்ட பழமொழி புறம்

பொதிந்து மூடினும் சேயார் முகத்துச் சென்றுதைக்கும் புன் புலால் நாற்றம்போலப் பறையறைந்தாங்கு ஓடிப் பரக்கும். ஆன தால் மறந்துந் தீவினை புரியேல், தன்னயங் கருதிப் பிறன்கேடு சூழற்க.

---

## அருஞ்செய்யுட் பொருட் பகுதி

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்

[சென்னை கோ. இராமலிங்கத்தம்பிரான் அவர்கள்]

### நால்வர் நான்மணிமாலை

(25-வது செய்யுள்.)

வானும் புகழ்புகலி மன்னன் றொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு-தானுங்
கரியாய் மொழியுங் கரியாய் விடாம
லெரியா ரழல்வீழ்ந் தெழுந்து.

(ப-ரை) வானும் புகழ் புகலி மன்னன் - தேவர்களும் துதிக்கின்ற சிகாழியில் அவதரித்த திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய, தொடர்பு ஒன்று ஏடுதானும் - திருப்பதிகம் எழுதிய திருவேடுதானும், எரிஆர் அழல் வீழ்ந்து—எரிதல் வாய்ந்த தீயில் விழுந்து, கரிஆய்விடாமல்-கரியாகி நீறுபடாமல், எழுந்து—(முன்னையினும் விளக்கமடைந்து) எழுந்து, தேன் உந்து இதழியோன் சீர்-தேனைச் சொரியும் கொன்றை மாலை யணிந்த சிவபெருமானது பரத்துவ நிலையை, கரிஆய் மொழியும் - தானே சான்றாக நின்று சாற்றும்; எ-று.

(வி-ரை) வானும் புகழ் புகலி மன்னன் தொடர்பு ஒன்று ஏடு தானும் எரிஆர் அழல் வீழ்ந்து கரியாய்விடாமல் எழுந்து தேன் உந்து இதழியோன் சீர் கரியாய் மொழியும் எனக் கொண்டு கூட்டுக.

# மரங்களின் வளர்ச்சி

[திருவனந்தபுரம் Prof. சுந்தரம்பிள்ளையவர்கள் M.A.]

* * *

2. மரவர்க்கத்திற்கு ஆகார சுவீகாரத்தால் வளர்ச்சியும் பிற்கிளையாக்க மெனும் பிரத்தியுத்பாதனமும் அல்லவா இன்றியமையாத இரண்டு தொழில் எனக் கண்டோம்? இவற்றுள் முதலாவதாகிய ஆகாரம் உட்கொண்டு வளரும் வளர்ச்சி எவ்விதம் நடந்தேறுகிற தென்று இப்பொழுது ஆராய்வோமாக. மரவர்க்க மென்பதில் ஆல் அரசு முதலிய உருவில் பெரிய மரங்கள் மாத்திரமல்ல, ஜலத்திலும் சுவர்களிலும் கண்ணுக்கும் புலப்படாதபடி படர்ந்து வளரும் எவ்வளவும் சிறியனவாகிய பாசி முதலிய எப்பேர்ப்பட்ட புற்பூண்டு செடி கொடிகளும் உட்படுவதனால், இவ்விடத்தில் நாம் செய்யப்புகும் ஆராய்ச்சியானது சமதிருஷ்டியாய் இவையனைத்திற்கும் பொருந்தும்படி இருக்க வேண்டிய தவசியம். அப்படிச் சமதிருஷ்டியாய்ப் பார்க்கும்போது மரவர்க்கத்தில் அகப்பட்ட எல்லாப் பதார்த்தங்களும் பொதுவாய்ச் சூக்ஷ்மரந்திரம் அல்லது சிற்றறை (Cell) எனும் முதல் வடிவத்திலிருந்து தோன்றியவைகளாய்க் காணப்படும். கட்டிடங்களுக்குச் செங்கலெப்படியோ அப்படி மரவர்க்கத்திற்குச் சிற்றறைகள். பொதுவா யிவற்றைச் சோதித்தறிய வேண்டுமானல், சிற்றுருவிளக்கி* (Microscope) எனும் கருவியின் துணையாலன்றிச் சாதித்தலரிதாம். அச்சூக்ஷ்மரந்திரங்கள் ஒவ்வொன்றும் ஒரு அங்குலத்தில் முப்பதிலோர் பங்கு முதல் ஆறாயிரத்தில் ஒருபங்கு வரையிலு ($\frac{1}{30}$—$\frac{1}{6000}$) மான மிகவும் சிறிய ஊடளவு கொண்டவைகளா யிருப்பதே, அக்கருவியின் ஆவசியகத்தைக் காட்டும். இச் சிற்றறைக்குள் வழு வழுப்பான ஒரு சத்து இருக்கின்றது. அதுவே ஜீவராசி யனைத்திற்கும் மூலாதாரமான பொருள். ஒரு கணப்பொழுதும் அது ஒரே நிலைமையிலிருப்ப தில்லை. நிரந்தரம் வேண்டும் வடிவங்களை யெடுத்துக் கொள்வதனால் நம்முடைய முன்னோர்கள் காமரூபியென்று வர்ணித்திருக்கும் வர்ணனை இதற்கே யமையும். கிரமசிருஷ்டி கூறும் வேதசாகைகள்† "அன்ன மெழுந்ததன் பின்னர்"

---

* 'பூதக்கண்ணாடி' என்று சாதாரணமாய்ச் சொல்வார்கள்.

† சாகை = வேதத்தின் ஓர் உட்பிரிவு

என்று உத்பிரேக்ஷித்ததும் இதனை நினைத்தே போலும். இப்படி ஜீவகோடிகளனைத்திற்கும் மூல காரணமாய் விளங்கும் இச் சத்திற்குப் பிரதமபீஜம் அல்லது மூலசத்தை‡ (Protoplasm) என்று பேர் கூறலாம். இம் மூலசத்தையைச் சுற்றிலும் மூடியிருக்கும் சுவர்க்கு மூலசத்தைமூடி அல்லது பிரதம பீசாவரணம் (Cell-walls) என்று பேரிடுவோமாக. 'மூல சத்தை'யும், 'மூலசத்தை மூடி'யும் கூடியே, முன் கூறிய சிற்றறை யல்லது சூக்ஷ்மரந்திரமாகிறது. இவ்வறைகள் பல வேறு வடிவங்கள் பெற்றிருப்பினும் சாதாரணத்தில் உருண்டையாகவும் கோழிமுட்டை வடிவமாகவும் அறுகோணுருவ மாகவும் இருப்பது வழக்கம். இவ்வறைகளின் பெருக்கமே மரங்களின் வளர்ச்சி. இவ்வறைகள் பெருகும் மார்க்கத்தை இனி விசாரிப்போம்.

3. மேல்கூறிய சிற்றறைக்குள் ளிருக்கும் வழுவழுப்பான 'மூலசத்தை'யின் அணுக்கள் அதன் நடுவில் நெருக்கமாய்ச் சேர்ந்து அந்தர் பீஜம் (Nucleus) எனும் பேரோடு 'மூலசத்தை'யின் பெருக்கத்தால் தாமும் பெருகத்தக்கனவா யிருக்கின்றன.

அப்படிப் பெருகுங்கால் சிற்றறையைச் சுற்றியிருக்கும் பிரதம பீஜாவரணம் எனும் சுவரின் உட்புறமும் பெருகி நீண்டு அந்தர்பீசத்தின் நடுவே ஊடுருவிச் சிற்றறையையும் அதனுள் அடங்கியிருக்கும் 'மூலசத்தை'யையும் இரண்டு படுத்தி விடுகின்றது.




I. இது தனிப்படச் சுபாவமா யிருக்கும் சிற்றறை.

(a) அந்தர்பீஜம்

(b) மூலசத்தை

(c) சிற்றறைச்சுவர்

II. இது இரண்டாய்ப் பிளவுபடத் தொடங்கும் சிற்றறை.

III இரண்டாகப் பிரிவுபட்ட சிற்றறை.

---

‡ சத்தை = இருக்கை, Existence.

இங்குக் காட்டியிருக்கும் படத்தில் இவ்வாறு ஒரு சிற்றறை இரண்டாக விகசிக்கும் தன்மையைக் கண்டுகொள்ளலாம். இப்படியே பிரிந்த சிற்றறைகளும் பெருகி, தனித்தனி மீண்டும் மீண்டும் இரண்டிரண்டாய்ப் பிரிவு படுவதே வளர்ச்சியின் மூல காரணமாக விருக்கின்றது. இரண்டாகவே பிரிய வேண்டுமென்ற நியமமில்லை. மூலசத்தையின் ஆதிக்கியத்துக்குத் தக்கபடி நாலாகவும் எட்டாகவும் பிரியலாம். இச்சிற்றறைகள் பெருகும் மார்க்கம் மேற்குறித்த படத்தாலு மறியாதவர்கள் எளிதில் அறிந்து கொள்ளும்படி ஒரு உதாரணம் சொல்வோம். ஒரு எலுமிச்சம் பழத்தையே மேல்குறித்த ஒரு சிற்றறையாக பாவனை பண்ணினால், அதனைப் புறமே பொதிந்திருக்குந் †தொலியே சிற்றறையின் சுவராகிய பிரதம பீசாவரணமாம். அப்பழத்திற் குள்ளிருக்கும் சாறு கோதுகளே காமரூபியென்று நாம் குறிப்பிட்ட மூல சத்தையாகும். அப்பழத்தை நறுக்கிப் பார்க்கும்போது அதனைப் பலவாய்ப் பகுக்கும் வெண்மையான இலேசுத் தொலிகளே பிரதம பீசத்தை ஊடுருவிச் சென்று பலவாக விபாகிக்கும் உட்சுவர்களாம். இப்படி இலேசான தொலிகளால் பிரிக்கப்பட்ட ஒவ்வொரு துண்டும் தனித்தனி வெவ்வேறு எலுமிச்சம் பழங்களாக உருண்டு திரண்டு உருக்கொள்வதில்லை. சிற்றறைகளோ என்றால் அவ்வாறு பிரிக்கப்பட்ட ஒவ்வொரு அம்சமும் மறுபடியும் வளர்ந்து தனித்தனி வெவ்வேறு சிற்றறைகளாக உருக்கொள்ளும். இங்குப் பிரஸ்தாபித்த சிற்றறையும் அதற்குள் அடங்கி யிருக்கும் மூலசத்தையும் அம்மூலசத்தை பெருகிப் பல சிற்றறைகளாக விகசிக்கும் மார்க்கமும், மாவர்க்கத்துள் புற்பூண்டு கொடி செடி இவையனைத்திற்கும் பொருந்துவன மாத்திரமல்ல, இதுபோலவே மிருக வர்க்கத்துக் குள்ளும் யானைமுதல் எறும்பீறான எல்லா உடம்பிற்கும் பொருத்தம் உடையனவே.

4. சமகுணமும் சம வடிவுமுடைய இச் சிற்றறைகள், பின்ன குணமும் பின்ன வடிவும் உடைய வேர், தண்டு, கிளை, இலை, பூ, காய் முதலிய வெளி யுறுப்புக்களாகவும் பட்டை, தடி காதல் முதலிய உள்ளுறுப்புக்களாகவும் உருக்கொண்டு விகசிக்கும் மார்க்கத்தைச் சாமான்யமாக இனி விசாரிப்போம். இச்சிற்

† 'தொலி' 'தோலி' என்றும் வழங்குவ துண்டு.

றறைகள் ஒன்றின்மே லொன்ருய் மணிகோத்தது போல் நிற்கும் காலத்தில் ஆவசியப்படுமிடத்து அவைகளைப் பிரிக்கும் இடைச் சுவர்கள் அழிந்து போய் அவையெல்லாம் ஒரே துவாரமுடைய ஒரு சிறுகுழல் போலாவதுண்டு. இப்படிப் பல குழல்களாகத் திரண்டு, தன்மயப்பட்ட பல ரஸங்களின் போக்கு வரவுக்கு வழியா யமையும்போது அவைகளுக்கு ரஸவாகினி, நாளசங்கிலி அல்லது குழாய்க்கோவை (Vascular system) எனும் பெயருண் டாகின்றது. இக் குழாய்க்கோவைகளே அதிகரித்து நின்று தொலி முதலிய மிருதுபாகங்களாக மாறுபடுகின்றன. மேற் கூறிய சிற்றறைகளி னுள்ளிருக்கும் 'மூல சத்தை' வேண்டிய இடத்து வற்றிப்போக அவற்றின் புறச்சுவர்கள் தம்முள் நெருங் கிக் கடினகுணம் பெறுகின்றன. இப்படி வன்மை பெற்ற புறச் சுவர்த் தொகுதிகள் ஒன்ருேடொன்று பொருந்தித் தடித்து நீளுங் காலத்தில் தந்து அல்லது நார் (Fibre) எனும் பெயர் பெறுகின் றது. இந்நாரடுக்குகள் (Fibrous tissue) வலுக்கவலுக்க மரத் தின் காடினிய *பாகமான காதல் முதலிய அம்சங்களாக உருக் கொள்ளும்.

இவ்விதமான மாறுபாடுகளொன்றும் அடையாமல் ஆதியிற் சொல்லி நிறுத்தியபடியே மூலசத்தை யடங்கிய சிற்றறைகள் தனித்தனியாகவும் கலந்தும் முன்னிருந்த நிலைமையை விடாமலே நிற்பனவுமுண்டு. இவற்றுள் சில சிற்றறைகள் தமக்குள்ளடங் கிய மூலசத்தையி னிடையில் வர்ணகாரிகளான சில ரேணுக்களை யுடைத்தாயிருந்து விசேஷமாய் இலைகளிடத்தில் காணும் பசுமை நிறத்தை விளைவிக்கின்றன. இப்படியே சுவை மணம் முதலிய பலகுண பேதங்களையும் வீரியங்களையும் தோற்றுவிப்பதும் இச் சிற்றறைகளுக்குள் ளமைந்து கிடக்கும் மூலசத்தையின் § ரேணு பேதங்களேயாம்.

5. இவ்விதமாகவேதான் மரங்களின் எல்லா அங்கங்களும் சிற்றறை எனும் சூக்ஷ்மரந்திரத்திற் குள்ளிருக்கும் மூலசத்தை யின் விகாஸ விகற்பங்களால் உண்டாகின்றன என்பது பிரத்தி யக்ஷமாய் நிரூபிக்கக்கூடும். ஆனல் பூர்ணமாய் அப்படி நிரூபிக்க

---

* காடினியம் = மிருதடினம்.

§ ரேணு = அணு.

வேண்டுமெனில் அரிய சாஸ்திர ஆராய்ச்சியும், சங்கேத மொழிப் பயிற்சியும், அசாதாரணமான சக்திவாய்ந்த சிற்றுருவிளக்கி முதலிய கருவிகளின் உதவியுமின்றி முடியாதாகலின் இங்கு இம்மட்டில் நிறுத்தவேண்டியதா யிருக்கின்றது. ஆயினும் மேற்கூறிய நாளசங்கிலி, நாரடுக்கு, தனித்தனியான விடு சிற்றறைகள் எனு மிவற்றை நன்குயறிந்திருக்க வேண்டியது இனி விவரிக்கப்படும் சங்கதிகளை அறிந்துகொள்வதற்கு அத்தியாவசியகமா யிருப்பதனால் அவற்றைக் கவனித்துத் தாரணைப்படுத்திக் கொள்வது பிரயோசனகரமா யிருக்கும். அழுகிக் காய்ந்து மேற்றொலி நீங்கிய அரசிலையைப் பலருங் கண்டிருப்பீர்கள். அதை உற்றுப் பார்ப்பீர்களாகில் வலை பின்னியதுபோல் அதில் அழகுபடத் தோற்றுவதெல்லாம், அவ்விலைக்குள் ரஸம் பரவும்படி அமைந்து கிடந்த நாளசமூகங்களும் அவ்இலைக்கும் முக்கிய நாளங்களுக்கும் மாறு வடிவம் கொடுத்த நாரடுக்குகளுமேயாம் என்பது புலப்படும். அழுகிக் கழிந்து போனவை யெல்லாம் இவ்விரண்டு வகுப்புக்களாகவும் மாறுபடாதிருந்து அவ்விலைக்குப் பசுமை நிறத்தைக் கொடுத்துவந்த விடுசிற்றறைகளே. ஆளி யிலையை இரண்டு மூன்று தினங்கள் நீரில் போட்டுவைத்து அதனுள்ளிருக்கும் விடுசிற்றறைகள் அழுகியழிந்த பிற்பாடு அவ்விலையை யெடுத்துப் பார்த்தால், மிகவும் அழகாய்ப் பின்னிக் கிடக்கும் நாளசமூகங்களும் இலைவடிவத்தை யுண்டுபண்ணின மிக்க இலேசான வெளித்தொலியாம் நாரடுக்கும் நன்குயப் புலப்படும். இதன் வெளிநாரடுக்கு மிகவும் பலமுள்ளதா யிருப்பதால் இதனுள் தங்கும் ஜலம் ஸ்படிக பாத்திரத்தில் இட்ட இரத்தினம்போல் பிரகாசித்துக் கொண்டு வெளியி லொழுகிப் போகாம லிருக்கும். பலபல பத்திரங்களையும் இப்படியே பக்குவஞ்செய்து பார்த்தால் அவற்றின் நாளக்கட்டுகளையறியும் சாஸ்திரப்பயிற்சிக்கு உபயுக்தமா யிருப்பதுமல்லாமல் மனதிற்கும் கண்ணுக்கும் களங்கரகிதமான பரமானந்தத்தை விளைவிக்கும் பொழுதுபோக்காகவு மிருக்கும்.

6. இதுவரையும் சொன்னவைகளால் மாவர்க்கங்களெல்லாம் சூக்ஷ்மரந்திரம் எனும் சிற்றறைகளாலும் அவற்றிலிருந்து தோன்றும் நாளசங்கிலி, நாரடுக்கு எனுமிரு முக்கிய விகற்பங்களாலும் ஆக்கப்படுகின்றனவென்றும், இச்சிற்றறைகளுக்குள்ளி

ருக்கும் பிரதம பீசமென்ற 'மூலசத்தை'யின் பெருக்கமே அம்மாவர்க்கங்களின் வளர்ச்சி யென்றும் நிரூபிக்கப்பட்டது. அம்மூலசத்தை யெப்படிப் பெருக்க மடைகின்றதென்பதை இனியாலோசிப்போம். மூலசத்தையை மூடியிருக்கும் சுவருக்கு ஒரு விசேஷகுணமுண்டு. அதென்னவென்றால், அச்சுவரினிருபுறமுமிருக்கிற சில சில விசேஷ திரவியங்களைத் தன்வழி மறுபுறம் புகுவித்துக் கலப்பித்தலேயாம். இக்குணத்தால் ஒரு சிற்றறையில் 'மூலசத்தை' பெருகியிருந்தால் அதன் சுவர்வழி அம்மூலசத்தையின் சில ரேணுக்கள் அடுத்த அறைக்குள் பிரவேசிக்கும். ஆதலால் ஒருவரியிலுள்ள சிற்றறைகளில் 'மூலசத்தை' பெருகினால் அதுவே அடுத்த வரிகளிலுள்ள சிற்றறைகளும் பெருகக் காரணமாகிறது. முதல்வரியிற்றானே எப்படி பெருக்கம் நேரிடுகிறதென்றால், மேற்கூறியபடியே அந்த வரியிலுள்ள சிற்றறைச் சுவர்வழி வெளியிலிருக்கும் நீர், காற்று எனும் இவை யிரண்டிலுமுள்ள சில பௌதிகங்கள் அந்தச் சிற்றறைக்குள் பிரவேசிப்பதனாலே தான். ஆனால் சிற்றறைகளுக்குள்ளிருக்கும் பதார்த்தங்கள் சுவர்வழியே வெளிப்பட்டு அதிலிருக்கு மூலசத்தை குறையவுங் கூடியதன்றோ என்றால் அப்படியாகாது. எனெனில், இரண்டு நெகிழ்ச்சியான பொருள்களுக்கிடையில் இதுபோன்ற ஒரு சுவரிருந்தால், இவ்விரண்டினுள், பௌதிகக்கலப்பால் கனம் கூடியதெதுவோ அதனிடத்திலேயே மற்றதன் பிரவேசம் நேரிடுவது இயற்கை விதியாயிருக்கின்றது. இதற்குச் சாதாரணமாய்ச் சொல்லுகின்ற திருஷ்டாந்தம் என்னவென்றால், ஊத்தாம்பெட்டியெனும் ஊதுபைக்குள் சொற்ப நீரும் சீனியும் இட்டு வாயை இறுகக்கட்டி சுத்தஜலத்தில் மிதக்கவிடுவோமானால், சுத்த ஜலம் ஊதுபைக்குள் கிரமமாய்ப்புகுந்து அப்பையை விரியச்செய்வதுமன்றி அதை வெடிக்கச் செய்யினுஞ் செய்யும். ஊதுபெட்டியில் சுத்தஜலத்தை யடைத்து சீனி யதிகமாய்க்கலந்த ஜலத்திலோ தேனிலோ அதைவிடுவோமானால், ஊதுபைக்குள்ளிருக்கும் ஜலம் தன்னிற் கனங் கூடிய ஜீனிரஸத்தாலும் தேனினாலும் இழுக்கப்பட்டுப் பையும் வரவரச் சுருங்கிவிடும். மாங்காய், எலுமிச்சங்காய் முதலானவைகளை உப்பிலிடும்போதும் உப்புக் குறைந்து நீர் அதிகப்பட்டு அளவிற்கு மிஞ்சி யிருக்குமேயானால், உப்பிலிட்ட காய்கள் நீருண்டு கனத்து அழுகிப்போவதும், உப்பதிகப்பட்டு

நீர்க் கனங்கூடுமாயின் அக்காய்கள் தங்கள் நீர்ச்சத்தையை யிழந்து சுருங்கிக் கெட்டியாய் வெகுநாளிருப்பதும் யாவரும் அறிந்தவிஷயமே. இந்தக்காரணத்தினாலேதான் உவர் நிலங்கள் விளையாதிருப்பதும். மலையாளத்தில் "வெள்ளூற்று" என்ற பூமியில் தெங்குமுதலிய மரங்களுண்டாவதில்லை. இந்தப்பூமியில் ஜலம் ஓயாமல் பெருகியும் மரம் வளராதிருப்பதற்குக் காரண மென்னவென்று யோசித்துப் பார்த்ததில், அந்த ஜலத்தில் இரும்புச்சத்தை மிகுதியாய்க் கலந்திருப்பதால் அந்த ஜலத்திலிருக் கும் போஷணைத் திரவியங்கள் தெங்கின் வேர்வழி உட்புகாமல், வேரிலுள்ள சத்தையே மேற்காட்டியவிதி யனுசரித்து நீரில் பிர வேசிக்கின்றதெனக் காணலாயிற்று. இப்படி நிரூபிக்கப்பட்ட இயற்கைவிதியை யனுசரித்தேதான் மரங்களிலிருக்கும் பிரதம பீசமென்ற மூலசத்தை தன்னிலும் கனங்குறைந்த காற்று, நீர் இவற்றிலுள்ள சத்தைகளைத் தங்கள் சுவர்வழி உட்கொண்டு பெருக்கம் அடைகின்றது.

7. சூக்ஷ்மரந்திரத்துக்குள்ளிருக்கும் மூலசத்தை பெருகி அத னைச் சுற்றியிருக்கும் பிரதம பீஜாவரணமெனும் சுவர்வழி அடுத்த சிற்றறைகளுக்குள் ஊறிப் பரவுவதே பொதுவாய் வளர்ச்சிக்கு ஏதுவாமென்றும், அம்மூலசத்தையின் பெருக்கத்துக்குக் காரணம் தன்னைச்சுற்றி யிருக்கும் நீர், காற்று முதலியவற்றிலுள்ள தக்க பௌதிகங்கள் ஊறுகாய் ஊதுபை முதலிய திருஷ்டாந்தங்களால் நிரூபிக்கப்பட்ட விதியின்படி சிற்றறைக்குள் பிரவேசித்து மூல சத்தையோடு அபின்னமாய்க் கலத்தலே யாகுமென்றும் இது வரையும் கூறி நிறுத்தினோம். மிருக வர்க்கத்திலும் மரவர்க்கத்திலு மடங்கிய ஜீவகோடிகளனைத்தின் வளர்ச்சிக்கும் முற்றிலும் பொதுவாக இசையு மிலக்கண மிதுவே. ஆனால் இவ்விதியின் பூர்ணமான அமைதி பாசி, காளான் முதலான மிகவும் கீழ்ப் பட்ட தரமான சராசரப் பொருள்களிடத்து மாத்திரமே வெளிப் படையாய் விளங்கக்கூடிய நிலைமையி லிருக்கிறது. இவற்றிற்கு மேலான புல் பூண்டு கொடி செடி மரம் இவைகளிடத்தில் அமைந்து கிடக்குஞ் சிற்றறைகள் பட்டை முதலியவற்றால் பொதிந்து கிடப்பதனாலும், அதிக உயரமும் பருமனும் விரிவு முடைய கிளையாதிகளாகப் பரந்து நிற்பதாலும் அச்சிற்றறைக

ளுக்குள்ளிருக்கும் மூலசத்தை நேருக்குநேராய் நீர், காற்று இவை களிலுள்ள பௌதிகங்களை இழுத் துட்கொள்ளச் சத்தியற்றன வாய்ப் போவதனால், அந்த அந்த மரவினத்திற்குத் தக்கபடி ஆகார ஸ்விகாரத்துக்காக வேர், இலையெனும் இரண்டு விசேஷ உறுப் புக்கள் கொடுக்கப்பட் டிருக்கின்றன. இவற்றுள் வேர் தனது தாய் மரத்தை நிலையில் நிறுத்துவதோடு, மண்ணிலிருக்கும் தனக் குப் பிரயோஜனந் தரும் பௌதிகங்களையும் நீரையும் இழுத்துட் கொள்ளுமென்பது யாவருக்கும் தெரிந்ததே. ஆனால் எப்படி யவற்றை உட்கொள்ளுகிறது என்பதைத் தெளிவா யறிய விரும்புவோமாகில் கீரை வெண்டை முதலிய யாதாவது ஒரு செடியின் வேர்களை முறிவுபடாமல் பிடுங்கி யெடுத்து நீரில் அலம் பிப் பார்க்கவேண்டியது. அப்படிப் பார்த்தால் அச்செடியின் ஆணிவேரும், அதில் நின்று பலவாய் வெடித்த பக்க வேர்களும், அப்பக்கவேர்களி லிருந்து பலவாய் வெடித்த கிளைவேர்களும், கடைசியில் மயிரிழைபோல் மிகச் சிறியனவாயும் வெண்மையாயு மிருக்கும் பொடி வேர்களுங் காணப்படும். இப் பொடிவேர்கள் தாம் உண்மையில் ஆகார சுவீகாரம் செய்வன, அவற்று ளொன்றை யெடுத்துப் பார்க்கில், அதன் கடைசி நுனியில், தொலியினால் பொதியப்படாமல் மிக்க மிருதுவா யிருக்கும் ஒரு தலைப்புக் காணலாகும். அத்தலைப்பிலிருப்பது யாதொரு பந்தத் துக்குள்ளு மகப்படாத சிற்றறையே. சிற்றுருவிளக்கிக் கண் ணுடியால் பார்த்தால் அச்சிற்றறைகளின் வடிவமுதலான விசித் திரங்களைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டு கொள்ளக் கூடும். அவைக ளுக்குள்ளிருக்கும் மூலசத்தை தான், ஊதுபை ஊலுகாய்த் திருஷ் டாந்தங்களால் விளக்கிய விதிப்படி, மண்ணிலும் ஜலத்திலுமுள்ள பௌதிகங்களை யிழுத்துட்கொள்ளுகின்றது. அப்படி யுட் சென்று தன்மயப்பட்ட பௌதிகங்கள் வெகு தூரத்திலிருக்கும், தண்டு, கிளை, யிலை, பூ, காய் எனு மிவைகளைச் சென்றடைய வேண்டியிருப்பதனால், அடுத்த ஒவ்வொரு சிற்றறையிலும் புகுந்து போவது தாமசமும் பிரயாசமுமாமெனக் கண்டு, அப் பௌதிகங் கள் மரத்தின் சரீரமுழுதும் நேரே வியாபிக்கும்படி நேரான சில பந்தரக்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. இவைதாம் நாம் முன் கூறிய நாளசங்கிலி அல்லது குழாய்வரி. இக்குழாய்கள் அந்த அந்த மரத்தின் ஆகிருதிக்கும் ஜாதிக்குணத்திற்கும் தக்கபடி விரிந்

தாம் சுருங்கியுமிருக்கும். எப்படியிருப்பினும் அவற்றின் உற்பத்தி முன்காட்டியபடியே சூக்ஷ்மாந்தரங்கள், மணிபோ லொன்றன் மேலொன்ருய்க் கோக்கப்பெற்று, இடைச்சுவாழிய, மத்தியி லிருந்த துவாரங்கள் நிலைநிற்கச் சம்பவித்ததேயாம்.

8. இப்படியே வாயுவிலுள்ள அம்சங்களை யிழுத்துட்கொள் ளுவதற்குத் தண்டு கிளை முதலாகிய பட்டை பொதிந்த பாகங்க ளுக்குப் போதுமான சக்தியில்லாததனுல், அத்தொழில் நடந்தே றும்படி இலையாகிய உறுப்பு உண்டாயிருக்கின்றது. பொதுவாக இலைகளின் மேற்புறத்தில் இதற்காகச் சிறுசிறு துவாரங்கள் அமைக்கப்பட் டிருப்பதுண்டு. அத்துவாரங்களுள் காற்றும் வெயி லும் படவே, அவற்றுளிருக்கும் சிற்றறை நிவாஸமான மூல சத்தை, வெயிலின் பிரேரணையால், காற்றிலிருந்து தனக்கு வேண் டிய பௌதிகங்களை யுட்கொண்டு தம்மிடத்திலிருக்கும் தமக்குத் தோஷகரமான சில வாயுக்களை வெளியாக்குகின்றன. இதுவே பொதுவாய் இலைகளின் தொழில்.

9. இவ்விதமாக இலையாலும் வேராலு முட்புகுந்த பௌதி கங்கள் இரஸமாய் மாறுபட்டு நாள தந்துக்களின் வழியாய் மர மெங்கும் வியாபித்து அதனை வளர்க்கின்றன. இப்படி வளர் வதும் நாம் முன்குறித்தபடி மூலசத்தையின் ஆதிக்கத்தால் சிற் றறைகளிரண்டாய்ப் பிரிவுபடும் மார்க்கத்தை யனுசரித்தே கிளை களின் கடை நுனிபெருத்து விகசிக்கின்றதன்றி வேறில்லை.

10. இப்படியெல்லாம் சோதனை செய்தறிந்தால் நம்முடைய கொல்லையிலுள்ள செடி கொடிகள் ஒவ்வொன்றும் எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுக்கும்! தேவேந்திர லோகத்திலுள்ள கற்ப காதி விருக்ஷங்கள் இந்திராணிபோகம் அமிர்தபான முதலிய சிற் றின்பங்களுக்கு ஆஸ்பதமாயிருக்கக் கூடுமேயல்லாது இத்தகைய சிதானந்தம் விளைவிக்கத்தக்கனவோ யாதோ அறியோம்! ஒரு தும்பைச் செடியைப் பிடுங்கிப் பார்க்கினும் இவ்வகை யறிவுடை யோர்க்கு, அதன் மூலகாரணமாகிய சூக்ஷ்மாந்தரமும் அதிலடங் கிய அற்புதமான மூலசத்தையின் வல்லபமும், அதுவேண்டிய வழி, தானே இரண்டுபடப் பிரிந்தும் அப்படியே பலவாய் விரிந் தும், முறையே நாரடுக்கா யொருபுறமும் நாளதந்துக்களாய் மற் றொரு புறமும், விடுசிற்றறைகளாய் வேறொரு புறமுமாக முதலில்

மாறுபட்டு, பிற்பாடு அந்தச் செடியின் சாதிக்குணத்திற் கேற்க, வேர், தண்டு, இலை, காய்களாக விகசித்து அவ்வாறு விகசித்த சமஷ்டி வடிவாகிய அச்செடியின் சம்ரக்ஷணைக்காக அம்மூல சத்தையே பொடிவேர்களின் நுனியிலிருந்துகொண்டு மண்ணி லுள்ள பௌதிகங்களையும், இலையின் மேற்புறத்துளைகளிலிருந்து கொண்டு காற்றிலுள்ள பௌதிகங்களையும் இழுத்து அம்மரத்தை யூட்டுவித்து வளர்க்கும் விசித்திரமும் இவ்விதம் நடத்தும் சித்விலாசமும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரத்தியக்ஷப் படுவதினால் அல்லவா,

> "பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
> பாவித் திறைஞ்ச வாங்கே,
> பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
> பனிமல ரெடுக்க மனமு
> நண்ணேன்"

என்று தாயுமானவர் அருளிச் செய்தனர்!

இத்தகைய பேரின்பம் எங்கும் எளிதில் பெறும்படியாக இருக்க அதனைத் தினைத்துணையேனும் நினைத்துப் பாராமல் "பொழுதுபோகவில்லை, பொழுதுபோகவில்லை" என்று மனோ வேகத்திலும் கடுகியோடும் காலகதி ஏதோ தம் விஷயத்தில் தள்ளாடு நடையடைந்ததாகப் பாவனைபண்ணி, "வாழ்நாட் கலகாய் வயங்கொளிமண்டிலம்"[1] ஆகிய சூரியனைச் சவுக்கால் அடித்து விரட்டல்போலச் சூதாட்ட முதலிய போராட்டங்களிலும் புறங் கூறலாதி வெறும் பாவங்களிலும் முயன்று பயின்று தம் வாழ் நாளை வீணாளாக்குகின்றார்கள். இவ்வித பொழுதுபோக்கன்றோ கையிலிருக்கும் பாயசத்தைக் கவிழ்த்துவிட்டு முழங்கையை நக்கும் திறமை!

> "தேன்கமழ் திரளையைச் சிந்திச் சந்தியால்
> கூன்கையில் விழுந்துளி கொண்டதன்மையே."[2]

—விவேக சிந்தாமணி.

---

(1) நாலடியார்
(2) பிரமகீதை.

# பதிற்றுப் பத்து விளக்கம்

(பண்டிட் A. நடராஜ பிள்ளை அவர்கள்)

(முன் சுருஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

## விருத்தியுரை

கடும்பு - சும்மாடு. பகையரசர்களின் மகுடங்கள் இவனுடைய வலிமையால் பயனற்றுப் போதலின், அவை, "இடங்கவர் கடும்பு," என்னப்பட்டன. "நின் செல்வம் மறம் வீங்கு பல் புகழாலே கேட்டற்கு இனிது," என முடிக்க. "நின் செல்வத்தைக் கேட்டொறும் காண்டல் விருப்பொடு, குன்று பல நீந்தி, வந்து, இறுத்த, ஒக்கல், வெண்சோற்றைத் தேறலொடு மாந்தி, தமது மகளிர் வயங்கிழை யணிய, அமர்பு," என முடிக்க. ஒக்கல்-புதிதாக உறவு பாராட்டிவந்த ஏழை மக்கள். அமர்பு - அமர. திருவோலக்கம் - Durbar. துயிலீயாது - துயிலாமல்: வினைத்திரிசொல். நூலாக்கலிங்கம் - மக்களால் நூற்கப்படாத நூலாகிய பட்டு நூலால் நெய்யப்பட்ட ஆடை. சுற்றம் - சூழ்ந்து காக்கும் படைத்துணைவர்கள். முன்பு பல அமயங்களில் அரசனது உடலைக் காத்து நின்றமை கருதி, "மெய்யார்த்த சுற்றம்," என்றார். மாதிரம் - இடவாகு பெயர். சிதாஅர் - இசைநிறையளபெடை. கொளீஇ - சொல்லிசையளபெடை. அரசர்க்கு மற்றைய புகழைக் காட்டினும் வீரங் காரணமாக மிகுந்துவரும்புகழ் மேம்பட்டதாதலின், அதனை "மறம் வீங்கு பல் புகழ்," என்று இப்பாட்டில் சிறப்பித்துக் கூறப்பட்டபடியால், "மறம் வீங்கு பல் புகழ்" எனப் பெயர் வரலாயிற்று.

## பொழிப்புரை நடை

எதிரிகளின் படையணியிலுள்ள வீரர்கள் விழும்படி வாளாயுதமாகிய பகையினாலே, அவர்களுடைய அறிவை மயங்கச் செய்து, தலைகளாகிய இடங்களை மூடிக்கொண் டிருக்கும்படியான சும்மாடு போன்ற முடிகளையுடைய பகையரசர்களின் தலைகள் நடுக்கங் கொள்ளும்படி எதிரிகளுடைய காவன் மரமாகிய கடம்பினை அடியோடு வெட்டி யெறிந்த கொடிய கோபத்தோடு கூடிய அரசனே! உன்னுடைய அரசச் செல்வமானது, பூமாலைபோன்ற

மயிர்த் தொகுதியினைக்கொண்ட பிடரியினையும், பிறவிலங்குகளின் உயிர்களைக் கொள்ளை கொள்ளும்படியான கூர்மையான நகங்களை யும் பெற்றுள்ள சிங்கங்கள் திரியும்படியான மலைப் பக்கங்களில் சிங்கங்களல்லாத மற்றைய விலங்குகளின் திரண்ட கூட்டமாகிய மந்தைகள் மனந் திடுக்கிட்டுக் கலங்குவதுபோல, முரசவாத்தியங் கள் முழங்கும்படியான பகைவர்களுடைய பெரிய நகரங்களில் வாழும் பகையரசர்கள் இரவும் பகலும் உறங்கா திருத்தலினாலே, திக்குகளில் உள்ளவர்களெல்லாம் நடுங்குதற்குத் தக்க வீரங்காரண மாக மற்றைப் புகழினும் மேம்பட்டுத் தோன்றும் பலவாகிய புகழ் களாலே கேள்விப் படுதற்கு இன்பமாக விருக்கின்றது.

நினது செல்வத்தை அங்ஙனம் கேள்விப்பட, கேள்விப்பட, உன்னைக் கண்டு மகிழ வேண்டுமென்ற விருப்பத்தினாலே, மத நீரின் நாற்றத்தினை விரும்பிச் சூழ்ந்து மொய்க்கும்படியான வண்டு களையும், வணங்குதலில்லாத இளமையான மயிர்களையும், இள மைத் தன்மையினாலேற்பட்ட உல்லாசமாக அசைந்தாடிச் செல் லும்படியான நடையினையும் கொண்ட பெரிய இளமையான ஆண் யானைகள், இளங் கன்றுகளின்மீது சூழ்ந்து மொய்க்கும்படியான வரிகளையுடைய வண்டுகளைத் தமது துதிக்கைகளால் விரட்டும்படி யான குட்டிகளோடு கூடிய பெண் யானைகளுடன் வாழும்படி யான பல குன்றுகளை முயற்சியோடு கடந்து, உன்னிடத்தில் சேர்ந்து தங்கிய கணக்கிலடங்காத புதிதாக உறவு பாராட்டிவந்த ஏழைமக்கள்; முன்பு பசிப்பிணியினாலே பட்டதுன்பம் கெடும்படி, கத்தியினாலே பிளந்து துண்டாக்கப்பட்ட வெண்மையாகிய கொழுப்போடுகூடிய நல்ல துண்டங்களாகிய ஆட்டிறைச்சி சேர்த் துச் சமைக்கப்பட்ட வெள்ளிய நெல்லரிசியாலாகிய வெண்மை யான சோற்றை, மொட்டுக்களாகிய பானைகளிலிருந்து உண்டாக் கப்பட்ட தெளிந்த கள்ளுடனே சாப்பிட்டு, தம்முடைய நெளிந்து தொங்கும்படியான நீண்ட கூந்தலினையும், வேரில் வளைந்து முளைத் தெழுந்த மூங்கிலினை யொத்த மெல்லிய தோள்களையுமுடைய குற்றமில்லாத பெண்கள் நீரில் மூழ்கி யெழுந்த பருந்து என்னும் பறவையினுடைய பெரிய நனைந்த சிறகுகளைப்போன்ற கறையான் சாப்பிட்ட கந்தைத் துணிகளைத் தமது இடுப்புகளினின்றும் நீக்கிய பின்பு, பட்டுப் புடவைகளைத் தமது இளமையான இடுப்புகளிலே கட்டிக்கொண்டு, பிரகாசிக்கின்ற ஆபரணங்களை உடல்களிலே

அணிந்து கொள்ளும்படி தங்கியிருக்க, நினது உடலைக் காப்பாற்றிய படைத்துணைவர்களோடு எழுந்தருளிய உன்னுடைய மிகுந்த ஆரவாரத்தோடு கூடிய திருவோலக்க மகிழ்ச்சி கண்டு அனுபவித்தற்கு இன்பமாக விருக்கின்றது.

## புதியவுரை நடை

கொடிய சினத்தோடு கூடிய கோவே! நீ பகைவர்களுடைய படையணியிலுள்ள பல வீரர்கள் விழும்படி வாளாகிய பகையினாலே அவர்களுடைய அறிவை மயங்கச் செய்தாய். தலைகளாகிய இடங்களை மூடிக்கொண்டிருக்கும் சும்மாடு போன்ற முடிகளையுடைய பகையரசர்களின் தலைகள் நடுக்கங்கொள்ளும்படி, எதிரிகளுடைய காவன்மரமாகிய கடம்பினை அடியோடு வெட்டி யெறிந்தாய். உன்னுடைய அரசச்செல்வமானது நினக்கேற்பட்ட பலவாகிய புகழ்களாலே கேள்விப்படுதற்கு இன்பமாக விருக்கின்றது. உனக்கேற்பட்ட பல்புகழோ, முரச வாத்தியங்கள் முழங்கும்படியான பகைவர்களுடைய பெரிய நகரங்களில் வாழும் பகையரசர்கள் இரவும் பகலும் உறங்கா திருத்தலினாலே, திக்குகளிலுள்ளவர்களெல்லாம் நடுங்குதற்குத் தக்க வீரங்காரணமாக மற்றைப் புகழினும் மேம்பட்டுத் தோன்றுவனவாகும். பூமாலை போன்ற மயிர்த்தொகுதியினைக் கொண்ட பிடரியினையும், பிறவிலங்குகளின் உயிர்களைக் கொள்ளை கொள்ளும்படியான கூர்மையான நகங்களையும் பெற்றுள்ள அரியேறுகள் அலைந்து திரியும்படியான மலைப் பக்கங்களில் மற்றைய விலங்குகளின் திரண்ட கூட்டமாகிய மந்தைகள் மனந்திடுக்கிட்டுக் கலங்குவது போல நின்பகையரசர்கள் கலங்குவதால் அவர்கள் இரவும் பகலும் உறக்கத்தை எதிர்ந்தாரில்லை.

கணக்கிலடங்காத ஏழைமக்கள் நினது அரச செல்வத்தை அங்ஙனம் கேள்விப்பட, கேள்விப்பட, உன்னைக்கண்டு மகிழ வேண்டுமென்ற விருப்பமிக்கனர். அவ்விருப்ப மிகுதியாலே, அவர்கள் பல குன்றுகளையுடைய வழிகளை முயற்சியோடு கடந்து, உன்னிடத்திற் சேர்ந்து புதிதாக உறவுபாராட்டித் தங்கினர். அக்குன்றுகளையுடைய வழிகள், மதநீரின் நாற்றத்தினை வேண்டிச் சூழ்ந்து மொய்க்கும்படியான வண்டுகளையும், வணங்குதலில்லாத இளமையான மயிர்களையும், இளமைத்தன்மையினாலேற்பட்ட

